உ

ஓம் தத்ஸத்

# குரு சீடாசாரம்



இதன் ஆசிரியர்

சுவாமி அருணகிரிநாதர்

காப்பிரைட்] 1933. [விலை அணா 2.

ஓம் தத்ஸத்

வேலுமயிலுந் துணை.



# குரு சீடாசாரம்



இதனாசிரியர்
சென்னை அகத்திய குருகுலம்
சாது நாராயண தேசிகர் மடாலயாதிபதி
ஞானாநந்த மணவாள மாமுனிகளின்
பிரதம சீடர்
உயர்திரு, சுவாமி அருணகிரிநாதர்

ஷையார் மாணவர்
திருகள்ளம் திருவாளர் மாணிக்க நாயகர்
அவர்களின் பொருளுதவியால்

சென்னை
'மீனாட்சி' அச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.
ஸ்ரீமுக ஆண்டு ஆனித் திங்கள்
1933.



[விலை அணு 2.

# சாத்துக் கவிகள்

ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்கள் இயற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அற்புதமற் புதமென்ன வான்றோர்கள் புகழ்ந்தேத்த
வார ணத்தின்
சொற்புதைநற் பொருளெல்லாந் தோன்றுமா றருணகிரி
சுவாமி சீலன்
விற்பனமாக் குருசீடா சாரமெனு மொருநூலை
விளங்கத் தந்தான்
கற்பவர்க ளிந்நூலைக் கமலனார் விதிசோராக்
கதிசேர் வாரே.

---

ஸ்ரீ சாது நாராயண தேசிகர் மாணவர்களி லொருவராகிய

பண்டிதஸ்ரீ ப். அ. கோவிந்தராஜ தாஸ் அவர்க ளியற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

குளகம்.

செந்தமிழ்நூற் பெருங்குரவன் குடமுனிவன் மரபிலுயர்
செல்வன் அன்பர்
பந்தமெலாம் அக்கணமே பறந்தோட வருள்பூக்கும்
பரமன் என்றன்
சிந்தைவளர் நாராய ணஸ்வாமி தேசிகனார்
சீடர் தம்முள்
மந்தமதி யுடையார்க்குஞ் ஞானநெறி யுரைக்குமண
வாளஸ் வாமி,

நாண்மலர்ச்சே வடிமறவா மாணவகன் அருணகிரி
நாதஸ் வாமி
மாண்டமிழ்நூற் பொதுப்பாயி ரப்பொருளும் மநுமுதல
வடநூற் கோளுங்
காண்டகச்சேர்த் தன்பரெலாங் கடைத்தேறச் செந்தமிழிற்
கழன்றிட் டானல்
சேண்பொருள்கூ றொருநூலாய்க் குருசீடா சாரமெனுஞ்
சீர்பே ரிட்டே.

---

மதுரை தமிழ்ச் சங்கப்

பண்டித உயர்திரு நாராயண சுவாமிகள்

வருதோடா சார வழக்கமற விங்குக்
குருசீடா சாரங் கொளவளித்தான்—அருகாத்
தெருணகிரி யானவளச் சென்னைதனி லோங்கும்
அருணகிரி நாதமுனி வன்
ஆற்றலுளான் சீற்றமிலா னவலிலா னேவலிலான்
தேற்றலுளான் வீரத் திறம்படைத்தோன்—போற்றவரு
நாராய ணகுருவி னுமமதை யிவ்வுலகிற்
பாராய ணம்புரிவிப் பான்.

---

சென்னை திருவொற்றியூரான் சமஸ்க்ருத பாடசாலை

உயர்திரு முக்தானந்த சுவாமிகள்

ஆரணத்திற் சொன்னபடி யாக்கியுல கிற்களித்தான்
பூரணவா சான்சீடர் பொற்பொழுக்கம்—நாரணனின்
பாதந் தொழுமணவா ளம்முனிதாள் பாவிக்கும்
நாதன் அருணகிரி நன்கு.

---

ஸ்ரீ திருவருணைத் திருமூலராதீனம் சென்னை

பண்டிட் சிவக்ஞான கந்தஸ்வாமிகள்

(எண்சீராசிரியம்)

சமபாவம் பாவமே யபாவ மென்னுஞ்
சரசானு பவங்குலவத் தக்கோர் வேண்ட
அமலனுய ரகத்யகுரு குலத்தோர் தெய்வ
மன்னஞா னனந்த மணவா ளப்பேர்
தமதடிமை யறிஞரா ரன்பு தாவுந்
தமிழரச ரருணகிரி நாத ஸ்வாமி
எமதன்பு குருபீடா சார நன்னா
வீந்த தெவர்புகழாரீ தெவர்க்கு மாமே.
தானென்ப தற்றவிடந் தானய்க் காட்டுஞ்
சதோதயத்தைக் கலைக ளெலாஞ் சமையமெல்லா
மானன்றென் றறைந்துமதே நாடி நாடி
நலிவனகண் டன்றுகுருந் தடி யிருந்தார்
தானெனநா ராயணதே சிகன்பால் வந்த
சற்சாமி யருணகிரி நாத ஞானி
மேனன்றே குருபீடா சார வாய்மை
விளக்கினு விளக்கமருள் வெளிய தன்றே.

---

சென்னை ஹிந்துதியாலாஜிகல் ஹைஸ்கூல்

தமிழ் பண்டிதர் ஸ்ரீமான் ச. கந்தசாமி முதலியாரவர்கள்

1. அகத்தியன் மரபில் வந்த
அருங்குண மணவா ளன்றன்
மிகத்திக ழருளி னேங்கும்
மேன்மைசேர் குணத்தின் மிக்கான்

91/1

அகத்திரு ளோட்டு நல்லோன்
அருணகி ரிப்பேர் சாமி
தகத்திகழ் குருசீ டாசா
ரம்மெனு நூல்தந் தானே.

2. இயல்புடன் குருவின் மேன்மை
இன்குணத் தவரா சாரம்
அயலவர் குருவா காமை
அருள்பெறு சீடன் றன்மை
முயன்றவன் கொள்ளத் தக்க
முதன்மைசேர் குணங்க ளெல்லாம்
நயமுறக் கூறு மிந்நூல்
நானிலத் தவர்க்கு நன்றே.

---

திருத்துருத்தி இந்திரபீடம் ஸ்ரீ. கரபாத்திர சுவாமிகளாதீனத்தின்
வழிவந்தவரும்
குருஸ்தவ முதலிய பதினைந்து நூல்களின் ஆசிரியருமாகிய
சென்னை - பெருமாள் பேட்டை
தே. அ. சாமி குப்புசாமியவர்க ளியற்றிய
நேரிசை வெண்பா

அருணகிரி யென்னும்பே ரார்ந்த துறவி
பொருணயங்கள் சாலப் பொருந்த—ஒருநல்
குருசீடா சார நூல் கூடன்பா லீந்தான்
பெருஞால முய்யநலம் பெற்று.

---

ஷை ஸ்ரீமத் தே. அ. சாமி குப்புசாமி யவர்களின்
திருவடித் தொண்டர்களுள் ளொருவர் புராணிகர்
காளத்தி. இ. சிதம்பரசாமி பாண்டியரவர்க ளியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

உன்னரிய வான்மநிலை யுணர்ந்துலக மும்மல
முனைற்று நின்ற, தன்னறிவா னந்தவுரு வாயிலகு
மருணகிரித் தாப தன்றான், பன்னரிய வாரியனு
மாணவனுங் கொளற்குரிய பான்மை யெல்லாம்,
துன்னிடவே யாத்தளித்தான் குருசீடா சாரமெனச்
சொலுநூன் மாதோ.

---

ஷை ஸ்ரீமத் தே. அ. சாமி குப்புசாமி யவர்களின்
திருவடித் தொண்டர்களுள் ளொருவர்
திருவான்மியூர் - பிரசங்க சிந்தாமணி ஸ்ரீமான்,,
த. கோவிந்தசாமிப் பிள்ளையவர்கள்

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

கற்றவர்கள் கண்டுவக்கக் குருசீடா சாரமெனுங்
கவினார் நூலை
நற்றவஞ்செய் தேசிகருஞ் சீடர்களுஞ் சிரங்கொள்ள
நயந்த ளித்தான்
செற்றமறுத் துண்மையறி வாநந்த வுருவாகித்
திகழ்வோன் ஞாலப்
பற்றறுத்தோ னருணகிரி முனீந்திரனென் னபிதானம்
படைத்து ளானே.

---

பண்டிதஸ்ரீ பூ. அ. கோவிந்தராஜதாஸ் அவர்களின்
தலைமை மாணவன் தி. முனிசாமி நாயகர் பாடிய
கட்டளைக் கலித்துறை

பருவம தோர்ந்து பலகலை சொற்றனற் பல்லியலைக்
குருசீடா சார மெனவுல கோங்கவே கூறினனல்
திருமண வாள சுவாமிதன் சேவடி சேர்ந்த சாமி
அருண கிரிநாதன் மெய்த்துற வெய்திய வன்பின்னே.

---

திரு. சுப்பிரமண்ய சிவம் அவர்களின் மாணவர்
உயர்திரு. சுவாமி. சுந்தர பாரதி அவர்கள்
வெண்பா.

சாரம் நிறைந்த தமிழிற் "குருசீடா
சார" மெனவொருநூல் தந்தனனல்—யாரும்
படிக்க நடக்கப் பரமானந் தத்தே
நடிக்க வருணகிரி நன்கு.

---

நாராயண தேசிகர் மாணவர்களி லொருவராகிய
திரு. கி. ஞானாநந்த முனிசாமி பிள்ளையவர்கள்

பவக்கடல் கடப்போர் கடத்துவிப் போரின்
பக்குவா பக்குவங் காட்டி
துவக்குறச் செய்யுந் துவிதபா வனையைத்
தொலைத்துநன் னிலையடை விக்குந்
தவத்திரு வருண கிரிமுனி செய்தான்
சற்குரு சீடா சாரம்
உவர்ப்பெனு மையந் தவிர்த்துணர் வுற்றிவ்
வுலகெலாங் களிப்புறும் பொருட்டே.

---

## மேலவலம் சிவகாருணிய முதலியார் அவர்கள்

நதியார் பொதியின் முனிமரபு
ஞானனந்த மணவாள
யதியார் பாற்கற் றுணர்சாமி
யருணகிரிநா தக்கவிஞன்
மதியா ரியன்சீர் சீடன்சீர்
மாண வெடுத்து நனிவிளக்கித்
துதியார் குருசீ டாசாரம்
சொற்ருன் பெற்ருன் சொற்ருனே.

---

## பிரசங்கபூஷணம் பு. பா. இரத்தினசபாபதி நாயகர் அவர்கள்

காருலவு பொழில்சென்னைப் பதியினெழி லகத்தியர்தங்
காட்சிப் பேருச்
சீருலவு மரபுயர வருதிலக னருணகிரிச்
செம்மல் நாமன்
நீலருவு சடைமுடிய னருள்குமர னடிக்களித்து
நிலவு நெஞ்சன்
ஏருலவு குருசீடா சாரமிதை நமக்களித்த
தெழில தம்மா.

---

## திரு. ஜயராம சுவாமிகளின் மாணவரி லொருவராகிய ஞாநாநந்த வேதகிரி முதலியார் இயற்றியது

அகத்தியனர் தன்மரபி லாதவன்போற் றேன்றி
யகத்திருளைப் போக்கியறிவானேர்—ஜகத்திற்
குருசீடா சாரமென கூறினர் சாமி
அருணகிரி நாதாரு ளால்.

ஓம் தத் ஸத்

முருகன் றுணை

# குரு சீடாசாரம்

## காப்பு

சற்குருசீ டாசாரத் தன்மைகளை யையமறச்
சொற்கினிய செந்தமிழாற் சொல்லவே—சிற்பரமாம்
நற்பதத்தைப் போற்றுநர்க்கு நாலாம் பதமருளுங்
கற்பகவி நாயகன்றாள் காப்பு.

## வழிபடு கடவுள் வணக்கம்

சமரபுரி யென்னுஞ் சரீரத்துண் மேவி
நமனையெலா முய்விக்கு நாதன்—அமரர்
பதிக்கிறைவ னின்னருளாற் பாடுமிந்த நூலை
மதித்துலக மேற்றிடச்செய் வான்.

## குரு வணக்கம்

அருவுருவா யோங்குபா மறிந்திடநீ சென்றால்
அரியரனே டயனென்பா ராதிசிவ மென்பார்
ஒருவேழ முகனென்பார் முருகபிரா னென்பார்
உமைவாணி திருவென்பா ரொண்கதிரோ னென்பார்
அருகபுத்த ரியேசுவல்லா வணுகால மென்பார்
அல்லவெறும் பாழியற்கை யாகுமென்பா ரேனோர்
குருபரனே யாவுமென வறிஞரடை வதனால்
குருபதமே தஞ்சமெனக் கொண்டுபவந் தீர்ப்பாம்.

## நூல்

# சற்குரவராசாரம்



நற்குடிப் பிறப்புஞ் சீலமு மன்பும்
நாடுமெய் யுணர்வுநன் னடையுங்
கற்பவ ருள்ளந் தெளிவுற வுணர்த்திக்
கசடறச் செயுமுறைத் திறனும்
பொற்கிரி பூமி புனலழல் வளிவான்
பூவையொத் திலகுமுற் பொலிவும்
அற்புத குணமு முலகிய லறிவும்
அமைபவ னருட்குரு வாமே. (1)

வலம்புரி முத்திற் குலம்புரி பிறப்பும்
வான்புனல் தூய்மையு மதுதான்
நிலம்படர்ந் தன்ன நலம்பட ரொழுக்கும்
நீணிலா வொத்தவிர்ப் பனமுந்
துலங்குசெங் கதிரின் வாய்மையுஞ் சமஞ்செய்
துலையினு வன்னநன் மனனும்
விலங்கலி லற்பும் வெஃகுரு வுளமும்
மேவுமெண் ணுருப்பென விளங்க. (2)

கற்புக ழின்மை யுண்மைவே ளாண்மை
தண்ணளி யோடுதா ளாண்மை
கற்பவ ருள்ளங் காமுறுந் தன்மை
கனியினு மினியசொல் லுடைமை
சொற்பொரு ளுணர்த்து மறிவுநா வன்மை
தோமறு மிசைநிறை பொறுமை
அற்பமும் பொச்சாப் பின்மையா தியவாம்
அரியநற் குணன்குரு வாமே. (3)

எவ்வுயி ரிடத்துங் கருணையு முள்ளத்
திறைவனின் பத்திமெய்த் துறவுஞ்
செவ்விய பிரம ஞானத்தின் பொலிவுந்
திரண்டொரு வடிவம தாகித்
தெவ்வரு முறவுஞ் செம்பொனு மோடுஞ்
செல்வநல் குரவிழி வுயர்வும்
இவ்வுல கதனிற் சமமெனக் கருதி
இருப்பவ னருட்குரு வாமே. (4)

குருவென மொழியு மெழுத்திரண் டதனிற்
கூறுமுற் பகுதியிற் குகாரங்
கருபொரு ளிருளென் றுரைக்குமஞ் ஞானங்
கற்சொரு பத்தினை மறைக்கும்
மருவிய ருகாரம் வயங்கொளி ஞானம்
வத்துவான் மாவினைக் காட்டுந்
தெருளினுற் சீடன் மனவிருள் போக்குந்
தேசிகன் குருபதப் பொருளாம். (5)

வித்தைபதி ரேழுஞ் சமயதந் திரிகள்
விளம்பிய நூலொடா கமங்கள்
புத்தமா தியவாப் புகல்பல மதத்தர்
புகன்றநூற் களையுநன் குணர்ந்தே
சுத்தவே தாந்த சூக்குமந் தெரிந்து
சொரூபநிட் டாநுபூ தியனாய்
மத்திம ரதமர் களுக்குமெய் வாழ்வை
வழங்குவோன் சற்குருவாமே. (6)

சீவனீ சுரனும் பேதமிவ் வுலக
சீவருந் தங்களுட் பேதஞ்
சீவனுஞ் சடமும் பேதமே யாகுந்
திகழிறை சடங்களும் பேதந்
தாவராதியவாஞ் சடங்களுட் பேதஞ்
சருவமும் பேதமே பிரமம்
ஆவதே யிலைநா மெனுமக விருளை
அழிப்பவ னருட்குரு வாமே. (7)

அற்பமு மிலைசீ வேசுர பேதம்
அவித்தைமா யாவுபா திகளால்
உற்பவ மானவை யாதலான் மித்தை
ஓர் குட மடவெளி போன்றே
கற்பிதஞ் சீவர் தங்களுட் பேதங்
களங்கமா மனவுபா திகளாற்
பற்பல வுருவாய்த் தோற்றிடுங் காண்பாய்
பலவித குடத்துள்விண் போன்றே. (8)

சரவச ரத்தின் வேற்றுமை யெல்லாஞ்
சகிதசா பாஸமா மனத்தால்
நிரவவ பாஸ நாமரூ பத்தால்
நிருமித மானதாற் கனவுட்
சரவச ராதி தோற்றுவ போலாஞ்
சாற்றுமீ சுரசட பேதஞ்
சரதமின் மாயா நாமரூ பத்தாற்
றந்ததாற் சாக்ஷிசொப் பனமே. (9)

சடசட பேதத் தன்மையும் பொய்யாஞ்
சத்திலா நாமரூ பத்தான்
மடமிகு மதியிற் ரேற்றும்வெவ் வேருய்
மாணவ கயிற்ற வதுபோல்
திடமதி யோடு திரிபினைப் போக்கிச்
சின்மயம் யாவுமென் றுணர்த்தி
படர்செயும் பேதப் பிராந்தியைப் போக்கும்
பண்டிதன் பாகுரு வாமே. (10)

பேதமே பயத்தின் காரண மதனற்
பேசிடு மைவகைப் பேத
வாதனை யறவே போதனை செய்ய
வல்லவன் சற்குரு வென்ப
சாதனை யில்லா துலகுயி ரீசன்
சத்திய முயிர்க ளென்னும்
ஏதமி லிறையோ டைக்கிய மாவ
தின்றென மொழிபவ ரன்றே. (11)

படர்ந்தவே தாந்தக் கடலினை முகில்போற்
பருகிமெஞ் ஞானசற் குரவன்
அடர்ந்தசந் தேக வுவர்ப்பினை நீக்கி
அங்கையி னமிழ்தென வளிப்போன்
கடந்தனின் முகந்த கடலினீர் போன்ற
கல்விமாத் திரமுடை யொருவ
னிடந்தனின் ஞான நூலினைக் கேட்டால்
ஏதமே விளைக்குமென் றிடைவாய். (12)

வேதத்தின் முடிவை யறிந்ததன் மயமாய்
விளங்குமெய்ஞ் ஞானியே யெவர்க்கும்
போதத்தை யளிக்குந் தேசிக னவன்
புகலுயி ரீசர்தம் பேத
வாதத்தின் மிக்க புலவனும் வேறு
மந்திர தந்திர மணிவி
நோதத்தைப் பிறருக் குரைத்துப்பொன் வாங்கும்
நொய்யரு மையா காரே. (13)

அறிவதற் கரிய பிரமவா ரிதியில்
அணைபரை திரையிறை யாக்கை
பொறிபுல னுலக மெனுநுரை யாதி
புலப்படா நின்றதின் மறையும்
நெறியதைக் காட்டி நினைப்பொடு மறப்பும்
நீங்கிய சாக்கிமாத் திரமாய்ப்
பிறிவறு மின்ப வடிவநீ யென்னும்
பெற்றியோ னருட்குரு வாமே. (14)

கட்டையிற் கள்வன் கயிற்றினி லரவங்
கானலி னீரெனப் பாழிற்
கொட்டையில் லாதே தோன்றிய மரம்போற்
குவலய மியாவுமுன் னிடத்திற்
பொட்டெனத் தோன்றி மறையுமென் றுரைக்கும்
புனிதமெய்ஞ் ஞானியே யென்றும்
அட்டதிக் குள்ளார் வணங்குதற் குரியான்
அவனெமக் கருளிறை யாமே. (15)

## வேறு

சாக்கிரசொப் பனஞ்சுழுத்தி தன்னி லெந்தச்
சைதன்யம் பிறழ்ச்சியற்றுத் தானே தோன்றும்
ஆக்கியநான் முகன்முதற்கீ டாதியீறாய்
அண்டசரா சரங்களிலெவ் வறிவு தோன்றும்
சாக்கியதா யுலகுயிருக் கெல்லாம் வேறாய்த்
தான்விளங்கி நின்றதெது வதுவே நீநான்
யாக்கைமுதற் காண்பனயா வையுநா மன்றென்
றறைந்துவாய் நிற்குமவ னுசா னமே. (16)

சென்றுரு மறியாத பிரம நீநான்
செகமுழுதும் பேதமில்சின் மயமே யாகும்
நன்றாய பானுலகோ டுயிர்க ளெல்லாம்
நலிவு செய்முக் குணவடிவ அவித்தை தன்னற்
பொன்றாநம் முருவினிற்கற் பிதமா மென்று
புந்திமயல் நீக்கி நித்த சுத்த முக்த
குன்றாத பரம்பொருளோ டபேத மாக்கிக்
குருதுரிய நிலையிலுளான் குரவ னமே. (17)

அருணிறைந்த தேசிகன்றன் மொழியாற் காணும்
அனைத்துலகு மித்தையென வறிந்து மேலாந்
தெருணிறைந்த பரப்பிரமந் தானே யென்று
தினமுமறு சந்தானஞ் செய்து செய்து
மருணிறைந்த சஞ்சிதவா காமியத்தை
வளர்ஞான வன்னியதா லெரித்து மிஞ்சும்
உருநிறைந்த வொருவினைக்கே யுடலை யீந்திங்
குபசாந்த நிலையடைந்தோன் குரவ னமே. (18)

தேவர்மக்கண் மாப்பறவை யாவு மெந்தத்
தேசதனை யகமகமென் றறுப விக்கும்
மேவருமச் சின்மயத்தாற் சடம தான
மெய்காணம் பொறியுலகம் விளங்கா நிற்கும்
ஓவரவின் சூழ்முகிலான் மூடப் பட்ட
ஒண்கதிரைப் போன்மனத்தான் மறைந்த வஃதே
சீவர்களுள் விளங்குபாஞ் சோதி யென்றே
தெளிவுறக்கண் டுணர்த்துபவன் குரவ ஞமே.(19)

எப்பிரம வாரிதியின் றிவலை தன்னுல்
இமையவரெல் லாமகிழ்வை யெய்தா நிற்பர்
அப்பிரம சுகத்தையெலா முலக வாசை
அறவொழித்த அறவோர்க ளறுப விப்பர்
ஒப்பொடுயர் வற்றவந்த வின்ப வாரி
யுட்படிந்து மாந்தியொன்ருய் நின்றமேலோன்
இப்புவியிற் பரமகுரு வாகி யார்க்கும்
ஏகாந்த வீடளிக்கும் இறைவ ஞமே. (20)



ஓம் தத் ஸத்

முருகன் றுணை

# சற் சீடாசாரம்



பல்லுயி ரிடத்துக் கருணையு மிறைவன்
பக்திமெய்த் துறவுமேற் கொண்டு
நல்லவ ரிடத்து நட்பொடு வணங்க
நாணமு மானமு மொழித்து
புல்லர்க ளிடத்துக் கனவிலு நேயம்
பொருந்திடா திருந்துமெய்க் குரவன்
சொல்லிய நெறியி னிற்குநன் மகனே
துகளறு சீடனென் றறிவாய். (1)

காமமும் வெகுளி மயக்கமுங் கொலையுங்
கடுமொழி கபடமு நீத்து
நேமமும் பொறையு மீகையு மன்பும்
நிராசையும் வாய்மையு நிறைந்து
நாமமோ டுருவ மாகுமிவ் வுலகில்
நாரியர் மயலையும் நீத்துக்
காமனைச் செயித்த காளையே தன்னைக்
காணுதற் குரியசற் சீடன். (2)

கற்றவர் வெறுக்குங் கடுமது பானம்
கயவர்கொள் ஊனபின் கஞ்சா
மற்றவர் விரும்பும் மலர்புனு காதி
வாசனைத் திரவிய வகைபூண்
வெற்றிலை பாக்கு புகையிலை பொடிமேல்
விலக்கிய யாவையு நுகர்தல்
குற்றமென் றறிந்து முற்றிலு மொழித்தோன்
குருவருட் பாத்திர னவான். (3)

* கருங்குயில் வாழை கடியுணி மந்தி
கட்டமுண் பன்றிவெள் ளாடு
பெரும்புலி வயிறு பதருடல் பீப்பாய்
பெறுமுவர்க் கழனிபன் னுடை
இருங்குளப் பாச்சி யெருமைவெள் ளாட்டி
இல்லிமண் குடத்தன்மை யின்றி
அருங்குண முழுது நிறைந்தநன் மகனே
அகம்பிர மாஸ்மியென் றறிவான். (4)

* அம்பரம் வன்னி யமர்செயும் வீரன்
யாண்டுந்தேய் வத்திமீ காமன்
அம்புரு டன்சொல் கடக்கிலாள் கழைக்கூத்
தாடிதிக் காய்பவ னமைச்சன்
கம்புசேர் பாலைப் பிரித்துணு மன்னங்
கறவையான் றன்மையை யொப்பான்
இம்பரிற் குருசொன் னெறியினிற் பிழையா
தின்பவாழ் வடைவதற் குரியான். (5)

நித்திய வனித்த வத்துவை யறியும்
நிச்சயத் தோடிம்மை மறுமை
சத்திய வுலக விச்சையு நீங்கிச்
சமதம வுபரதி திதிக்கை
உத்தமச் சிரத்தை யொடுசமா தானம்
ஒப்பறு வீட்டினி லிச்சை
வைத்தநன் மகனே சுத்தசின் மயமாய்
வயங்குதற் குரியசற் சீடன். (6)

வன்னியிற் படிந்த மகன்றனைப் போலும்
வலையிடைப் பட்டமான் போலும்
பன்னக வாயிற் றேரையைப் போலும்
பருந்தின் காற் பார்ப்பது போலும்

பன்னுமுத் தாப வேடனை களினற்
பதைபதைத் துருகியே வாடித்
தன்னிலை காணச் சற்குரு பாதஞ்
சார்பவன் சீடருட் சிறந்தோன். (7)

உடலினுக் குயிர்போ லாசியி னூல்போல்
ஒளியினை யிமைபுரப் பதுபோல்
மடமையை நீக்கி வாழ்வினை யளிக்க
வந்தசற் குரவனைக் காத்துப்
படவர விடத்தும் பாய்புலி யிடத்தும்
பரவையின் வடவையி னிடத்தும்
திடமுட னசான் செல்லெனிற் பாயுஞ்
சீடனே சிவமய மாவோன். (8)

ஆரிய னிருந்த பின்னிருந் திடல்நீ
ராடிய பின்புன லாடல்
ஆரிய னுணவுட் கொண்டபி னுண்ணல்
அவர்துயில் செய்தபின் றுயிலல்
ஆரிய னுரையைத் தடுத்துரை யாடா
தவன்பணி யேவலே புரிதல்
ஆரியன் றன்னைப் பரசிவ மாக
அறிதல்சற் சீடனின் கடனும். (9)

உச்சியம் போதி லூரிடைப் புகுந்தே
ஒவ்வொரு பிடியன மாகப்
பிச்சையை யேற்றல் மதுகா மென்று
பேசிய நெறியினி லெடுத்து
உச்சிதக் குரவர்க் கூட்டிய பின்னர்
உள்ளதை யுண்ணெனி லுண்டாங்
கச்சமு மன்பு மமைதியுங் கொள்ளும்
அவன்றனை யறியுஞ்சற் சீடன். (10)

ஆத்மோ டங்கந் தானஞ்சற் பாவம்
ஆகிய நான்கினி லாத்தம்
நேத்திரம் போலும் நேசனைப் போலும்
நினைவறிந் தொழுகுதல் அங்கம்
காத்திரக் கைபோற் பணிசெயல் தானங்
காணிவீ டுயிர்பொரு ளாதி
காத்தல்சற் பாவஞ் சிவமெனக் குருவைக்
கருதல்சற் சீடனற் கடனும். (11)

தேசிக னன்போ டிருந்திடி லரியுஞ்
சினந்திடுங் காலுருத் திரனும்
மாசிலாக் கருமஞ் செய்திடி னயனும்
மருவிடிற் சாந்தியைப் புனலும்
ஆசினி போற்றன் வடிவினை மறைத்த
அவித்தையை யொழித்திடும் போதில்
தேசினை விரிக்குங் கதிருமாய் நினைக்குஞ்
சீடனே சிவோகமாய்த் திகழ்வான். (12)

தத்துவா தீதப்பொருளினை யாசான்
றன்னிட மறிவதற் குரியான்
நித்தமும் பொழுதோ டேகி யட்டாங்கம்
நிலமிசை படப்பணிந் தெழுந்து
பத்திர புட்பத் தாலருச் சித்துப்
பரசிவ வடிவெனப் பரவி
உத்தமக் குரவன் குறிப்பினை யுணர்ந்தே
ஒண்முக மலர்ச்சியோ டொழுகி. (13)

ஆரிய னிருக்கப் பணித்தபி னிருந்தே
டவிழென வுரைத்தபி னவிழ்த்தும்
ஆரியன் படிக்க வென்னலும் படித்தும்
அவனுரை பொருளினை வேட்டோன்

நீரினைப் பருகும் நேர்மைபோற் செவிவாய்
நெஞ்சமே கொள்கல னாக்கிக்
கூரிய மதியின் மயலறக் கேட்டுக்
கொள்பவன் சின்மய மாவான். (14)

தேசிக னிடத்திற் கேட்டசெம் பொருளைச்
சிந்தித்துத் தெளிதலிற் சிறிதும்
மாசிலா தொழுகு மாணவ ரோடு
மருவிமுன் னையுறு பொருளைக்
கூசிடா தவரை வினவியு முரைத்துங்
குணமதைக் கொண்டுவீண் விடுத்தும்
பேசிய நெறியி னின்றிடுந் தீரன்
பிறவிநோய் போக்குதற் குரியான். (15)

களங்கமில் மனதின் கிருபையு மிறைவன்
கருணையுங் கலைமக ளருளும்
வளந்திகழ் குரவன் றிருவருள் நோக்கும்
வாய்த்திடப் பெற்றமா ணவன்றன்
உளங்கதிர் மணிபோற் றிகழுமெய் நூலின்
உட்பொரு ளங்கையிற் கனிபோல்
விளங்கு மச்சிவமே தானெனக் கண்டு
வீட்டின்பந் துய்க்குமெய் மகனே. (16)

முற்றிற்று.



## சீடாசாரம் 4 - 5 வது பாடல்களின்

# குறிப்புரை

---

### * நாலாவது பாடல்

குயில்—இறகு முளைக்கும் வரையில் காக்கையினிடத்தில் உணவுண்டு வளர்ந்து பின்பு தன்னினத்தைச் சார்ந்துவிடும்.

வாழை—நன்றாக எரியும் நெருப்பிற் கூடினும் தான் எரியாது.

உணி—பசுவின் தீம்பால் நிறைந்த மடியில் கடித்துக் கொண்டிருந்தும் அசுத்தமாகிய இரத்தத்தையே குடிக்கும்.

மந்தி—(குரங்கு) கட்டி வைத்திருந்தாலும் அங்குமிங்கும் அலைந்து திரியும்.

கட்டமுண்பன்றி—(ஊர்ப்பன்றி) நன்றாகக் கழுவிக் கொண்டுவந்து நல்லுணவளிப்பினும் மீளவும் சேற்றிற் புறண்டு மலத்தை யுண்ணும்.

வெள்ளாடு—அருகில் அடர்ந்து தழைத்த செடியில் மேயாது அங்கொன்று மிங்கொன்றுமாகக் கடித்து அலைந்து திரிந்து அரை வயிறுணவுமின்றித் திரும்பும்.

புலி—மற்றை மிருகங்களுடன் சேர்ந்து வாழாத கோரவிருத்தியுடையது.

வயிறு—விலை மதிக்கவொண்ணா மணங் கமழும் நல்லுண வளிப்பினும், உடனே அருவருக்கத்தக்க அமேத்திய வடிவாயகற்றிவிட்டுத் தபித்துக்கொண் டிருக்கும்.

பதர்—கஷ்டப்பட்டு பயிர் செய்தவனுக் குதவுமாறு குவிந்து கிடக்கும் நெற்குவியலிற் சோமல் காற்றிலடித்துக் கொண்டு போகும்.

உடல்—நாடோறும் குளிப்பாட்டித் தூய்மையாக வைக்கினும் மலினப்படுத்திக்கொள்ளும்.

பீப்பாய்—தண்ணீர்க்குள் அமிழ்த்திக் கொண்டிருக்கும் வரையிலடங்கி யிருந்து கையை எடுத்தால் உடனே வெளியில் வந்து விடும்.

உவர்க்கழனி—கஷ்டப்பட்டு விதைத்த விதையையுங் கெடுத்து கைப்பு மாறாதிருக்கும்.

பன்னாடை—சாரமாகிய மதுவைக் கீழே விட்டுவிட்டு அசாரமாகிய ஈ யெறும்பாதிகளை வைத்துக்கொள்ளும்.

குளத்துப்பாச்சி—எவ்வளவு கோம் கையிற் கலக்கி விலக்கினாலும் மறுபடியும் முன்போல் மூடிக்கொள்ளும்.

எருமை—தெளிந்த சுத்தமான நீரையும் கலக்கி அசுத்தமாக்கிக் குடிக்கும்.

வேள்ளாட்டி—(வேலைக்காரி) உண்மை யன்பின்றி கொடுக்கும் ஊதியத்திற்காக வேலை செய்வாள்.

இல்லி மண்குடம்—தன்னகத்துட்கொண்ட நீரையெல்லாம் கொஞ்சங் கொஞ்சமாகக் கீழே விட்டுவிடும்.

## * ஐந்தாவது பாடல்

அம்பரம்—(ஆகாயம்) மற்றைய நான்கு பூதங்களோடு தான் கலந்திருந்தாலும் அவைகளால் தாக்குறா திருக்கும்.

வன்னி—(நெருப்பு) நெய்சமித்துகளுடன் குப்பை கூளம் முதலானவைகளை யிட்டபோதிலும் விருப்பு வெறுப்பின்றித் தகித்து விட்டு மற்றவைகளால் மலினப்படா திருக்கும்.

அமர்க்களவீரன்—எதிரியை வென்று அவனரசைக் கைப்பற்றச் சென்றவன் அவனைச் செயிக்க முடியாவிடினும்

அவன் கைப் பாணத்திற் கிரையாகி அக்கோலத்தோடு அவ் விடத்திலேயே மடிவானலலது புறமுதுகிட்டோடான்.

யாண்டேந்தேய்வத்தி—(திக்குச்சி) எவ்விடத்திலுறைத் தாலும் உடனே நெருப்புப் பற்றிக்கொள்ளும்.

மீகாமன்—(மாலுமி) தனது லக்ஷியத்தை நோக்கிக் கப்பலை நடத்துவா னல்லாது கப்பல் சென்ற வழியே தான் செல்ல மாட்டான்.

புருடன்சோல் கடக்கிலாள்—கொண்ட கணவனை தெய்வமென்றெண்ணிக் குறுக்கே பேசாதிருப்பாள்.

கழைக்கூத்தாடி—கழையின்மீது பலவித அபிநயத் தோடு நடிப்பினும் தனது லக்ஷியத்தின்மீதே கண்ணுங் கருத்துமா யிருப்பான்.

தீக்காய்பவன்—தனக்குண்டாகிய குளிரைப் போக் கும் நிமித்தம் நெருப்பை யடுத்து அதில் விழாமலும் விலகி விடாமலு மிருப்பான்.

அமைச்சன்—அரசனது மேன்மையைக் தனதாகக் கருதி அவன் குறிப்பறிந் தொழுகி யாவருக்கும் நன்மையே செய்வான்.

கம்புசேர்பாலைப் பிரித்துண்ணும் அன்னம்—நீரோடு சேர்ந்த பாலைப் பிரித்துண்ணும்.

கறவையான்—(பாற்பசு) புல்லைக் கண்டவிடத்தில் சீக்கிரமாய் வயிறு நிறைய மேய்ந்து சென்று ஓரிடத்தில் சாவதானமாய் படுத்துக்கொண்டு மீண்டும் அவ்வுணவை வாயில் கொண்டு வந்து நன்முக அசை போட்டு மென்று சாப்பிடும்.




"மீனுட்சி" பிரஸ், 31, வைத்தியநாத முதலிவீதி, சென்னை.

ஓம் தத்சத்

அகத்திய குருகுலம்

ஸ்ரீ சாது நாராயண தேசிகர்

# புத்தகசாலை

120, திருவொற்றியூர் ஐரோட்

# புத்தக விளம்பரம்

| | | |
|---|---|---|
| அனுபவானந்த தீபிகை முதலிரு திருமுறை மூலம் | | |
| காலிகோ பைண்டு ... ... | 0 12 0 | |
| ஷை ராப்பர் பைண்டு ... ... | 0 10 0 | |
| ,, உரையுடன் அச்சில் யிருக்கின்றன | | |
| ,, இரண்டாந் திருமுறை உரையுடன் | 1 8 0 | |
| ,, மூன்றாந் திருமுறை (வசனம்) | 0 12 0 | |

இவை ஷை சங்கத்தின் முதலாசிரியரும் சித்தர் சாஸ்திர பாரங்கதரும் வேதாந்த வித்வ சிரோமணியும் சதா பிரம்ப நிஷ்டாபாராய் விளங்கியிருந்தவருமான ஸ்ரீ சாது நாராயண தேசிகர் திருவாய் மலர்ந்தருளப்பட்டவை. இவற்றில் முதலிரு திருமுறைகளும் செய்யுள் வடிவமானவை. மூன்றாந் திருமுறை வசன வடிவமானது. இவை வேதாந்தத்தின் பதினான்கு வித்தைகளின் முக்கியக் கருத்தாக விளங்கும் திருஷ்டி சிருஷ்டி வாதத்தை மந்த அதிகாரியும் தெளிந்து உஜ்ஜீவிக்கும் வண்ணம் அமைக்கப்பட்டுள்ளன. மற்றும் சித்தர் நூல் இதிகாச புராணாதிகளின் உண்மைக் கருத்தை உள்ளவாறு உணராதவர்களுக்கு விளையும் மயக்கங்களை யொழித்து உண்மைக் கருத்தை யுள்ளவாறுரைக்குந் தன்மையுடையவை.

| | |
|---|---|
| புராணே திகாஸத் துவார்த்த தீபிகை | 0 12 0 |
| பாலாமிர்தபோதம் வித்தியா வித்தியா சரித்திரம் | 0 4 0 |
| தேசிகர் திருவந்தாதி | 0 2 0 |
| குரு சீடர்சாரம் | 0 2 0 |

இவை ஷை தேசிகரின் சிஷ்யப்பிரசிஷ்யர்களா லியற்றப்பட்டவை. இவையே யன்றி சகல வேதாந்த, சித்தாந்த நூல்களும் இலக்கிய இலக்கண நூல்களும் பிறவும் இங்கு கிடைக்கும்.

தபாற்கூலி பிரத்தியேகம்.